# ॥ श्री कृष्णाष्टकम् ॥

## ஸ்ரீக்ருஷ்ணாஷ்டகம்

(1)

श्रियाश्लिष्टो विष्णुः स्थिरचरगुरुर्वेदविषयो
धियां साक्षी शुद्धो हरिरसुरहन्ताऽब्जनयनः ।
गदी शङ्खी चक्री विमलवनमाली स्थिररुचिः
शरण्यो लोकेशो मम भवतु कृष्णोऽक्षिविषयः ॥

ஸ்ரீயாச்லிஷ்டோ விஷ்ணு: ஸ்திரசரகுருர்வேதவிஷயோ
தியாம்ஸாக்ஷீ சுத்தோ ஹரிரஸுர ஹந்தாSப்
ஜநயன:।
கதீ சங்கீ சக்ரீ விமலவனமாலீ ஸ்திரருசி:
சரண்யோ லோகேசோ மம பவது க்ருஷ்ணோ
Sக்ஷிவிஷய:॥

*ஸ்ரீலக்ஷ்மிதேவியையணைந்து, சராசரத்திற்குத் தலைவராய் வேதப்பொருளாய், புத்திகளுக்கு சாக்ஷியாய், அசுரர்களை அழித்தவராய், கமலக்கண்ணனாய் கதை, சங்கு, சக்ரம், வனமாலை இவற்றைக் கொண்டவராய் உலகத்தாருக்கு காக்கும் விஷ்ணு வாய் இருக்கும் கண்ணபிரான் என் கண்ணுக்குத் தெளிவாய் காட்சி தரட்டுமே!*

(2)

यतः सर्वं जातं वियदनिलमुख्यं जगदिदं
स्थितौ निःशेषं योऽवति निजसुखांशेन मधुहा ।
लये सर्वं स्वस्मिन्हरति कलया यस्तु स विभुः
शरण्यो लोकेशो मम भवतु कृष्णोऽक्षिविषयः ॥

யத: ஸர்வம் ஜாதம் வியதனில முக்யம் ஜகதிகம்
ஸ்திதௌநிஃசேஷம் யோऽவதி நிஜஸுகாம்சேந
மதுஹா।
லயே ஸர்வம் ஸ்வஸ்மின் ஹரதி கலயா யஸ்து ஸ விபு:
சரண்யோ லோகேசோ மம பவது க்ருஷ்ணோ
ऽக்ஷிவிஷய:॥

ஆகாயம், காற்று முதலிய இந்த பிரபஞ்சம் முழுதும் எவரிடமிருந்து தோன்றியதோ, எவர் தனது ஆனந்தாம்சத்தால் தோன்றிய உலகை முழுமையாகக் காக்கிறாரோ, பிறகு, விபுவான எவர் ப்ரலயகாலத்தில் எல்லாவற்றையும் தன்னிடமே இழுத்து லயிக்கச் செய்கிறாரோ அத்தகைய உலக ரக்ஷகணான கண்ணன் என் கண்முன்னே தோன்றட்டும்.

(3)

असूनायम्यादौ यमनियममुख्यैः सुकरणै –
र्निरुद्धयेदं चित्तं हृदि विलयमानीय सकलम् ।
यमीड्यं पश्यन्ति प्रवरमतयो मायिनमसौ
शरण्यो लोकेशो मम भवतु कृष्णोऽक्षिविषयः ॥

அஸூநாயம்யாதௌ யமநியமமுக்யை: ஸுகரணை:
நிருத்யேதம் சித்தம் ஹ்ருதி விலயமாநீய ஸகலம்।
யமீட்யம் பச்யந்தி ப்ரவரமதயோ மாயின மஸௌ
சரண்யோ லோகேசோ மம பவது க்ருஷ்ணோ
ऽக்ஷிவிஷய:॥

சான்றோர் சீரிய கரணங்கள் மூலம் யமம் நியமம் முதலியவற்றைச் செய்து, மனதைக் கட்டுப்படுத்தி, மற்றதை யெல்லாம் ஒடுங்கச் செய்து, மாயையை வசப்படுத்திய பரமனை நேரேகாண்கின்றார்களே அப்பரமன் என் கண்முன்னே காட்சியளிக்கட்டும்.

(4)

पृथिव्यां तिष्ठन्यो यमयति महीं वेद न धरा
यमित्यादौ वेदो वदति जगतामीशममलम् ।
नियन्तारं ध्येयं मुनिसुरनृणां मोक्षदमसौ
शरण्यो लोकेशो मम भवतु कृष्णोऽक्षिविषयः ॥

ப்ருதிவ்யாம் திஷ்டன்யோ யமயதிமஹீம் வேத நதரா
யமித்யாதௌ வேதோ வததி ஜகதாமீசமமலம்।
நியந்தாரம் த்யேயம் முனிஸுர ந்ருணாம்
மோக்ஷதமஸௌ
சரண்யோ லோகேசோ மம பவது க்ருஷ்ணோ
ऽக்ஷிவிஷய:॥

பூமியில் நின்றுகொண்டு பூமியை கட்டுப்படுத்துகிறார். ஆனால் அவரை எவரும் அறிந்து கொள்ளவில்லை என்று வேதம் கூறுகிறது. உலகை அடக்கியாளும் ஈசனை, தியானம் செய்ய வேண்டியவனை, முனிவர், தேவர்கள், மனிதர் ஆகியோருக்கு மோக்ஷம் அளிக்கும் அப்பெருமான் என் கண்முன்னே தோன்றட்டுமே.

(5)

महेन्द्रादिर्देवो जयति दितिजान्यस्य बलतो
न कस्य स्वातन्त्र्यं क्वचिदपि कृतौ यत्कृतिमृते ।
वलारातेर्गर्वं परिहरति योऽसौ विजयिनः
शरण्यो लोकेशो मम भवतु कृष्णोऽक्षिविषयः ॥

மஹேந்த்ராதிர்தேவோ ஜயதி திதிஜான்யஸ்ய பலதோ
ந கஸ்ய ஸ்வாதந்த்ர்யம் க்வசிதபி க்ருதௌ
யத்க்ருதி ம்ருதே।
பலாரா தேர்கர்வம் பரிஹரதியோऽஸௌ விஜயிந:
சரண்யோ லோகேசோ மம பவது க்ருஷ்ணோ
ऽக்ஷிவிஷய:॥

மகேந்த்ரன் முதலிய தேவர், அவரது பலத்தைக் கொண்டு அசுரர்களை வெல்கின்றார்கள், அவர் வேலையன்றி எவருக்கும் எதிலும் தன்னுரிமை கிடையாது. இந்த்ரன் வெற்றிப் பெற்றாலும் கர்வம் அடையாவண்ணம் அவனையாளும், உலகம் போற்றும் அவ்ஈசனை நான் கண்ணால் காண விழைகிறேன்.

(6)

विना यस्य ध्यानं व्रजति पशुतां सूकरमुखां
विना यस्य ज्ञानं जनिमृतिभयं याति जनता ।
विना यस्य स्मृत्या कृमिशतजनिं याति स विभुः
शरण्यो लोकेशो मम भवतु कृष्णोऽक्षिविषयः ॥

விநா யஸ்ய த்யானம் வ்ரஜதி பசுதாம்ஸூகர முகாம்
விநா யஸ்ய த்யானம் ஜநிம்ருதிபயம் யாதி ஜனதா।
விநா யஸ்ய ஸ்ம்ருத்யா க்ருமி சதஜநிம் யாதி ஸ விபு:
சரண்யோ லோகேசோ மம பவது க்ருஷ்ணோ
ऽக்ஷிவிஷய:॥

உலக மக்கள் அவரை தியானம் செய்யவில்லையெனில் பன்றி முதலிய ஐந்தறிவிகளாகவே ஆய்விடுவார்கள். பிறப்பு இறப்பு ஆகியவற்றால் பயத்தையும் கொள்வர். அவர் நினைவின்றி இருந்தால் க்ருமி கீடங்களாகவும் அவர் பிறப்பர். அத்தகைய அகில லோக சரண்யனான கிருஷ்ணன் என் கண்முன்னே தோன்றட்டுமே!

(7)

नरातङ्कोट्टङ्कः शरणशरणो भ्रान्तिहरणो
घनश्यामो वामो व्रजशिशुवयस्योऽर्जुनसखः ।
स्वयंभूर्भूतानां जनक उचिताचारसुखदः
शरण्यो लोकेशो मम भवतु कृष्णोऽक्षिविषयः ॥

நராதங்கோட்டங்க:: சரணசரணோ ப்ராந்திஹரணோ
கனச்யாமோ வாம: வ்ரஜ சிசுவயஸ்யோ
ऽரர்ஜுனஸக:।
ஸ்வயம்பூர் பூதாநாம் ஜனக உசிதாசாரஸுகத:
சரண்யோ லோகேசோ மம பவது க்ருஷ்ணோ
ऽக்ஷிவஷய:॥

மனிதரின் கவலையை யகற்றுபவர், சரணம் என்போருக்கு பாதுகாப்பு அளிப்பவர், மயக்கம் தெளிவிப்பவர், நீருண்ட மேகமெனத்திகழ்பவர், குறும்புக்காரர், யாதவ நண்பர், அர்ஜுனனுக்குத் தோழர், தானேதோன்றியவர், ஜீவராசிகளுக்குத்தந்தை, நல்லொழுக்கமுடையோருக்கு சுகமளிப்பவர் - அத்தகைய கிருஷ்ணர் எனக்கு காட்சியளிக்கட்டுமே!

(8)

यदा धर्मग्लानिर्भवति जगतां क्षोभकरणी
तदा लोकस्वामी प्रकटितवपुः सेतुधृगजः ।
सतां धाता स्वच्छो निगमगणगीतो व्रजपतिः
शरण्यो लोकेशो मम भवतु कृष्णोऽक्षिविषयः ॥

யதா தர்மக்லாநிர்பவதி ஜகதாம்க்ஷோப கரணீ
ததாலோகஸ்வாமீ ப்ரகடிதவபு: ஸேது த்ருகஜ:।
ஸதாம் தாதா ஸ்வச்சோ நிகமகணகீதோ வ்ரஜபதி:
சரண்யோ லோகேசோ மம பவது க்ருஷ்ணோ ऽக்ஷிவிஷய:॥

உலகையழிக்கும் தர்ம நலிவு ஏற்படும் பொழுதெல்லாம் தானே தோன்றி உலகைக் காப்பவர். ஸேதுவை கட்டிய பழையவர், நல்லோரைத் தாங்குபவர், தூயவர், வேதம் போற்றும் யது குலத்தலைவர், அத்தகைய க்ருஷ்ணர் எனக்கு காட்சியளிக்கட்டும்.

க்ருஷ்ணாஷ்டகம் முற்றிற்று.

